# வைதிக தர்ம வர்த்தனீ



மலர் 13
இதழ் 10

சார்வரி௵
ஆடி௴

ஆசிரியர் :
ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,
'மாம்பலம் குருகுலம்'
No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்
சென்னை—17.

## யஜுர்வேத ஸந்த்யா வந்தனம்.

( ஐந்தாம் பதிப்பு. )

ஸ்வரத்துடன் ஸம்ஸ்கிருத மூலம், பதவுரை, கருத்து, ஸந்த்யானுஷ்டானத்தை விளக்கும் படங்கள், சில புதிய விஷயங்கள் அடங்கியது.

விலை ரூ. 1—50. V. P. P. யில் அனுப்பினால் ரூ. 2—25.

கிடைக்குமிடம் :— ஆசிரியர்: ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா, 'மாம்பலம் குருகுலம்' 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம், சென்னை 17.

## விநாயக சதுர்த்திவரை மலிவான விலை!

விநாயக புராணம் ரூ. 2—50. விநாயக ஸஹஸ்ரநாமம் (ஸம்ஸ்கிருதம்-தமிழ் அர்த்தம்) ரூ 1-00. விநாயக சதுர்த்தி பூஜை, கதை 25 ந. பை. ஆகிய மூன்றையும் சேர்த்து வாங்கினால் **சந்தாதாரர்களுக்கு மாத்திரம்** (மொத்த விற்பனைக்கில்லை) 3 ரூபாயுக்கே அளிக்கிறோம். **தனித்தனி வாங்கினால் உள்ள விலைதான்.** V. P. ஆனால் ரூ. 3—78. ஸாதாரண புக்போஸ்டுக்கு முன்பணம் அனுப்பினால் ரூ. 3—25 மாம்பலம் குருகுலத்திற்குத்தான் எழுதவேண்டும்.

கிடைக்குமிடம் :—

ஆசிரியர் : **ஸ்ரீவத்ஸ, வெ. ஸோமதேவ சர்மா,**
"மாம்பலம் குருகுலம்"
No. 2, ஸ்டேஷன் ரோடு, W. மாம்பலம்,
சென்னை—17.

## சார்வரிஷு ஆடிமீ க்ரீஷ்மருது. தக்ஷிணாயனம்.

| தேதி | இங்கிலீஷ் | வாரம் | திதி. | நா. வி. | நக்ஷ. | நா. வி. | யோ. | ச்ரா திதி |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 16 | சனி | அஷ். | 9-08 | அசு. | 42-53 | சி. | — |
| 2 | 17 | ஞா. | நவ. | 12-05 | பர. | 48-12 | சி. | தச. |
| 3 | 18 | திங் | தச. | 16-22 | க்ருத். | 54-35 | ம. அ. | ஏகா. |
| 4 | 19 | செவ். | ஏகா. | 21-35 | ரோ. | 60-00 | அ. | — |
| 5 | 20 | புதன் | த்வா. | 27-25 | ,, | 1-38 | சி. | த்வா. |
| 6 | 21 | வியா | த்ர. | 33-27 | மிருக. | 9-02 | ம. | த்ர. |
| 7 | 22 | வெள். | சசி. | 39-27 | திரு. | 16-32 | சி. | சசி. |
| 8 | 23 | சனி ● | அமா. | 45-10 | புன. | 23-48 | சி. | அமா |
| 9 | ஜூலை 24 | ஞா. | ப்ர. | 50-28 | பூச. | 30-42 | சி. | ப்ர. |
| 10 | 25 | திங். | த்வி. | 55-05 | ஆயி. | 37-02 | சி. ம. | த்வி. |
| 11 | 26 | செவ். | த்ரி. | 58-55 | மகம் | 42-40 | சி | த்ரி. |
| 12 | 27 | புதன் | சது. | 60-00 | பூரம் | 47-15 | அ. | சது. |
| 13 | 28 | வியா. | ,, | 1-40 | உத். | 50-45 | ம. சி. | பஞ். |
| 14 | 29 | வெள். | பஞ். | 3-12 | ஹஸ். | 52-50 | அ. சி. | ஷஷ் |
| 15 | 30 | சனி | ஷஷ். | 3-17 | சித். | 53-25 | ம. அ. | சப். |
| 16 | 1960 31 | ஞா. | ஸப். | 1-45 | சுவா. | 52-20 | சி. | அஷ் |
| | | | அஷ் | 58-38 | | | | |
| 17 | 1 | திங். | நவ. | 53-53 | விசா. | 49-40 | ம. சி. | நவ. |
| 18 | 2 | செவ் | தசமி | 47-42 | அனு. | 45-32 | சி | தச. |
| 19 | 3 | புதன் | ஏகா. | 40-17 | கேட். | 40-12 | சி. ம. | ஏகா. |
| 20 | 4 | வியா. | த்வா. | 32-00 | மூல. | 33-57 | சி. | த்வா. |
| 21 | 5 | வெள். | த்ர | 23-08 | பூரா. | 27-08 | சி. | த். ச. |
| 22 | 6 | சனி ○ | சசி. | 14-10 | உத்ரா | 20-13 | சி. | பௌ |
| 23 | ஆகஸ்ட் 7 | ஞா. | பௌ. | 5-28 | சிர. | 13-40 | அ. ம. | ப்ர. |
| | | | ப்ர. | 57-25 | | | | |
| 24 | 8 | திங். | த்வி. | 50-27 | அவி. | 7-50 | சி. | த்வி. |
| 25 | 9 | செவ். | த்ரி. | 44-57 | சத. | 3-10 | ம. அ. | த்ரி. |
| | | | | | பூரட். | 59-58 | | |
| 26 | 10 | புதன் | சது. | 41-07 | உத்ர. | 58-32 | சி. | சது. |
| 27 | 11 | வியா. | பஞ். | 39-12 | ரேவ. | 59-02 | சி. அ. | பஞ். |
| 28 | 12 | வெள். | ஷஷ். | 39-13 | அசு. | 60-00 | அ. | ஷஷ் |
| 29 | 13 | சனி | ஸப். | 41-08 | ,, | 1-25 | சி. | சப். |
| 30 | 14 | ஞா. | அஷ். | 44-43 | பர. | 5-35 | சி. | அஷ் |
| 31 | 15 | திங். | நவ. | 49-35 | கிரு. | 11-15 | ம. அ. | நவ. |

4, 19உ ஏகா., 3, 30உ க்ரு., 8உ அமா. 21உ வரலக்ஷ்மி வ்ர.
22உ யஜுர் உ. க, 23உ காயத்ரீ ஜபம், 29உ கோகுலாஷ்டமி.

**நீதி சாஸ்த்ர மறியாதவரை முன்னே காணமுடியாது.**

यतो धर्मः ततः कृष्णः

यतः कृष्णः ततो जयः

# வைதிக தர்ம வர்த்தனீ

धर्म एव हतो हन्ति धर्मो रक्षति रक्षितः

மலர் 13 | சார்வரி௵ ஆடிமீ | இதழ் 10



## பொருள் அடக்கம்.




வருஷ சந்தா ரூ. 5.

தனிப்ரதி 44 ந. பை.



காரியாலயம் :

வைதிக தர்ம வர்த்தனீ,

கடவாசல்,

வடகால் போஸ்ட்,

சீர்காழி வழி,

(தஞ்சை ஜில்லா.)

## <—) நண்பர்களுக்கு விக்ஞாபநம். (—>

உங்களது பேராதரவால் பத்ரிகை விருத்தியாகி நன்கு நடக்கிறது. காலந் தவராமல் முன்னதாக சந்தா (தநம்) தாநமளிக்கும் தார்மிக ருக்கு நன்றி தெரிவிப்பதுடன் மேன்மேலும் அவர்கள் க்ஷேமமடைய பகவானை வேண்டுகிறோம்.

இரண்டொருவர் ''பத்ரிகை அனுப்புங்கள், சந்தா அநுப்புகிறேன்'' என்று கூறியும் பலமுறை நியாபகப்படுத்தியும் சந்தா அநுப்பாததை த்ருஷ்டி தோஷமாகவும் துரதிருஷ்டமாகவும் கருதவேண்டியிருக் கிறது. அவர்கள் உடனே சந்தா அநுப்பும்படி அவரைத் தூண்ட பகவானையே வேண்டுகிறோம். தயை செய்வாராக!

தர்மமே ஜயம் என்ற கொள்கையுடன் வெகு நாளாக ஆதரித்த வர்கள் கடிதம் எழுதாவிட்டாலும் தர்மத்தை நம்பி அவர்களுக்கும் பத்ரிகை அநுப்பிவருகிறோம். தர்மத்தை வெளியிடும் வைதிக தர்ம வர்த்தனியை ஆதரியுங்கள். தர்மத்தை நம்பி அதை அநுஷ்டித்தால் அது நம்மைக் கைவிடாது!

பரிஹரிக்க முடியாத சில அஸௌகர்யங்களால் உடனே அநுப்ப முடியா விடினும் தாமதித்தாவது மறவாமல் அநுப்புக! அதற்கும் அஸௌகர்யமிருந்தால் ''போதும், இனி பத்ரிகை அநுப்பாதீர்கள்'' என ஒருவரி எழுதி பழைய பிரதிகளையநுப்பினுல் பிறர் வேண்டிய காபி களை அநுப்ப ஸௌகர்யமாக இருக்கும். எந்த வகையிலாவது ஆடிக் குள் ஒருமுடிவிற்கு வருக. வருந்தாதீர்கள்! நமஸ்காரம்! மன்னிக்கவும்!

**தார்மிகச் செய்தி:** அபூர்வமானதும் பலருக்கும் பயன்படக் கூடியதுமான விஷயத்தையே பிரசுரித்தல் நல்லதல்லவா? ஸபை நடத்துபவர் அவ்வூராருக்கு மாத்ரம் இன்பந்தருவதை, இடமில்லாத தாலும் மற்றவருக்கு இன்பகரமாக இராதோ என அவைகளைப் பிர சுரிக்க முடியாமைக்கு மிக்க வருந்துகிறோம். மன்னிப்பீராக! அவச்ய மானதைச் சுருக்கிப் போடுகிறோம்.

**விஷய தானம்:** பழைய க்ரந்தங்களை ஒட்டிய விஷயங்களையே பிரசுரிப்பது கொள்கை. பலர் அதையே ஆதரிக்கின்றனர். அபூர்வ மானதும் அறிவை வளர்ப்பதும் இஹபர பலனைத் தருவதுமான விஷ யங்களையே வெளியிடுகிறோம். நமது பத்ரிகையின் தனிச்சிறப்பைப் பாராட்டி, பலர் ''திநசரியில் வரும் பலன் இதில் எதற்கு?'' என கூறியதால் அதை மாற்றி அறிவு வளர, ஜோதிடப்பகுதி வெளியானது. அந்த ஆசிரியரும் மறைந்ததால் அவர்போல் மற்றவர் கிடைக்கும் வரையாவது அது வெளியாகாது.

**கேட்க சுதந்தர முண்டு:** உங்களால் உங்கள் பொருட்டு உங்கள் பொருளால் நடக்கு மிதில் என்னென்ன விஷயம் வேண்டும்? எது வேண்டாமென கேட்கும் சுதந்திரத்தைப் பயன் படுத்தி தாராள மாகக் கேளுங்கள். சாஸ்த்ர விரோத மில்லாததும் பலர் விரும்பிய தையும் வெளியிடுகிறோம். பத்ரிகை சுதந்தரத்தையும் கொள்கையை யும் குறைக்கக் கூடாது.

நமஸ்காரம்.

---

***அதன் பெயரே அதன் பொருளை நன்கு விளக்கும்.***
***ஸத்யமே மாதா, க்ஞாநமே பிதா, தர்மமே ப்ராதா.***

## நூல் அறிமுகம்.

**ஸ்ரீ வரலக்ஷ்மீ விருதம்:** உபாத்யாயர் அகப்படாமல் தவிப்ப வற்கு இது ஒரு ஸஞ்ஜீவிநீ. மற்றவர்க்கும் பூஜை ஆனபின் படிக்க வேண்டியது. யார் இதை யாருக்கு உபதேசித்தது? இதை விட்ட தால் ஏற்பட்ட பலன், செய்வதாலுண்டாகும் பலன், லக்ஷ்மீ 108 நாமார்சனை பூஜா விதி, கயிற்றில் உள்ள முடிகளின் பூஜை தாரண மந்த்ரம் முதலிய ஸகல அபூர்வ விஷயங்களு முள்ளது. மாம்பலம் குருகுலத்திற்கு 33 ந. பை. ஸ்டாம்பநுப்பிப் பெறலாம்.

**யஜுர் உபாகர்ம:** ஸமிதாதானம் காமோகார்ஷீத் ஜபம் மஹா ஸங்கல்பம் அதன் பொருள் பூணல் தரிக்க மந்த்ரம் காண்டரிஷி தர்ப்பணம் வேதாரம்பம் வியாஸபூஜை காயத்ரீ ஜபவிதி காயத்ரீ மஹிமை பிரும்ம யக்ஞம் முதலிய பல விஷயங்களடங்கியது. ஸங் கல்ப வாரம் திதி நக்ஷத்ரங்கள் பிரவரத்துடன் சுமார் 10 அபிவாதந தோத்ரம் அர்த்தத்துடன் உள்ளது. 58 ந. பை. ஸ்டாம்பு அநுப்பி மாம்பலம் குருகுலத்தில் பெறலாம்.

**ஸ்ரீ கல்கி புராணம்:** உப புராணங்களில் இது இரண்டாவ தாக வெளிவந்துளது. மிக அபூர்வமானது. இதுவரை தமிழில் வராதது. பற்பல விசித்ரமான கதைகள் நிறைந்தது. தெளிவான தமிழ் நடையில் புத்தக ரூபமாக அமைந்தது. விலை 2 ரூ. V. P. ரூ. 2—75. ஸாதாரண புக்போஸ்ட் முன்பணமனுப்பினால் 2-25. மா. குருகுலம், 2, ஸ்டேஷன் ரோட், W. மாம்பலம், சென்னை-17.

---

## தார்மிகச் செய்திகள்.

**ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகள்** ராமநாயக்கன்பாளயத் தில் இவ்வாண்டு வியாஸ பூஜை சாதுர் மாஸ்ய ஸங்கல்பம் செய்து 2 மாத மங்கு விஜயம் செய்வார்கள். (நங்கவரம் பங்களாவில்)

**ஸ்ரீ சிருங்கேரி பீடாதிபதிகள்** சென்னை தியாகராய நகரில் வ்யாஸபூஜை சாதுர்மாஸ்ய ஸங்கல்பம் செய்வார்கள். ஸ்ரீ சிருங்கேரி பீடம் தற்கால பீடாதிபதி ஸ்ரீ அபிநவ வித்யா தீர்த்த ஸ்வாமிகள் சென்னைக்கு விஜயம் செய்வது இதே முதல் முறையாகும்.

**ஸ்ரீ பூர்ணானந்தநாத வித்யா பீடம்** ஆனிமீ 12ம் தேதிமுதல் 25ம் தேதிவரை ஆஷாட நவராத்ரி மஹோத்ஸவம் நடத்தியது.

**கோடியிலொரு சாஸ்திரீய விவாஹம்:** மாயவரம் ஸ்ரீராம மூர்த்தி சாஸ்திரிகள் ருதுவாகாத கன்யகையை ஸ்ரீ கந்தஸ்வாமி தேவஸ்தானம் அத்யயனபட்டர் ஸ்ரீ மணிசாஸ்த்ரிகளின் சிதையுள்ள புத்ரனுக்கு கன்யாதானம் செய்தார். வரன் வீட்டில் பிரவேச ஹோமம் ஆரம்பித்து நான்கு நாள் ஔபாஸனமும் பிறகு உடனே ஸ்தாலீபாகமும் நடந்தது.

---

தயை ஸகா, ஶாந்தியே பத்நீ, பொறுமையே புத்ரன்

# அக்நி கார்யத்தின் விளக்கம்.

(பக்ஷிதீர்த்தம், ய. சுப்ரமண்யதீக்ஷிதர், ஸோமயாஜி)

(ஆனிமீ" தொடர்ச்சி)

(4) ஸமித்துக்கள் நான்கு புறமும் பிடித்து ஜ்வலிக்கும் போது ஹோமம் செய்தால் விஶ்வே தேவர் ரூபியாக இருந்து திருப்தியடைகிருர். (5) ஸமித்துக்கள் எல்லாம் பூராவும் ஒன்ருகப் பிடித்து சிவந்து ஜ்வலிக்கும் போது செய்தால் இந்திர ரூபியாக இருந்து திருப்தியடைகிருர். (6) ஸமித்துக்கள் நன்ருக ஜ்வலிக்கும் தணலாக மாறி ஜ்வாலையடங்கியதும் அதில் ஹோமம் செய்தால் ப்ரஜாபதி ரூபியாக திருப்தியடைகிருர். (7) ஸமித்து முதலியவை நன்ருகப் பிடித்து ஜ்வாலை அடங்கி தணலாக மாறி அதன்மேல் சாம்பல் பூத்திருக்கும் அக்னியில் ஹோமம் செய்தால் பரப்ரஹ்ம ரூபியாக திருப்தியடைகிருர். இந்த ப்ரம்ஹ ரூபத்தில் செய்தால் எல்லாவித நன்மைகளும் தானகவே ஏற்படும். [பொதுவாக எல்லா கர்மாக்களிலும் அக்னி நன்ருக ஜ்வலித்து தணலாகி கொஞ்சம் சாம்பலாக ஆகும் தருவாயில்தான் ஹோமம் செய்யவேண்டும். ஜ்வாலையில் செய்வதுதான் சிறந்ததென நினைப்பது தவறு. அந்த ஜ்வாலைகூட இல்லாமல் ஸமித்தின்மீதோ விரட்டியின் மீதோ ஹோமம் செய்வது அதைவிட மிகத்தவறு. இதைப் படிப்பதோடு இல்லாமல் பொதுவாக எல்லோரும் செய்கின்ற (சிராத்தாதி) ஹோமத்தில் நினைவு வைத்துக் கொண்டு குறிப்பிட்டபடி ஹோமம் செய்யவேண்டுமென வேண்டுகிருேம்.]

அக்னியில் தீர்த்தம் அல்லது அசுத்தமான வஸ்துக்கள் சேர்ந்தால் அதற்காக உபகாத ப்ராயஶ்சித்தம் செய்ய வேண்டியது. அதாவது ப்ரதான ஹோமத்திற்கு முன் ஒரு பாலாஶ ஸமித்தை எடுத்து ப்ரோக்ஷித்து கிழக்கு நுனியாக அக்னியில் **पुनस्त्वा+कामा:** என்னும் மந்திரத்தைச் சொல்லி (ஸ்வாஹாகாரம் கடைசியில் சொல்லவேண்டியதில்லை.) வைத்துவிட்டு அக்நயே வஸுமீதாய இதம் நமம என்று உத்தேச த்யாகமும் சொல்லவேண்டும். இதன் பிறகு பிரதான ஹோமத்தைச் செய்யவேண்டும்.

---

இவ்வருவரும் எனது பந்துக்களென தர்மராஜன் கூறினர்.

ஔபாஸநத்தில் ஹோஷ்யாமி என்று கேட்பதற்கு முந்தியும், சதுஷ்பாத்ர ப்ரயோகங்களில் பரிஷேசன மான பிறகு ப்ரதான ஹோமத்துக்கு முன்னும் ஷட் பாத்ர ப்ரயோகங்களில் मुखाहुति உள்ள விடங்களில் அதற்குப் பிறகும் முகாகுதி இல்லாதவிடங்களில் ஆஜ்ய பாகாந்தம் செய்து முடிந்த பிறகும் செய்யவேண்டியது. இந்த புநஸ்த்வா ஹோமம் திருநெல்வேலி ஜில்லாவில் சிலர் எப்போதுமே செய்யும் ஸம்ப்ரதாயமும் உண்டு. நமக்குத் தெரிந்தும் தெரியாமலும் ஜலதிவிலே அக்னியில் விழுந்திருக்கலாம் என்று அவர்கள் அபிப்பிராயம்.

**மந்த்ரார்த்தம்:** அக்னி தேவனே நீர் திவிலேப்பட்டு உமது பலம் குறைந்தால் வஸுக்களும் ருத்ரரும் ஆதித்ய ரும் ருத்விக்குகளும் மறுபடியும் இந்த ஸமித்து ஹோமத் தால் புஷ்டி அடையும்படி செய்யட்டும். நீரே நாநாவித மான தனத்தைக் கொடுக்க வல்லவர். நீர் எங்களால் கொடுக்கப்படும் ஆஜ்யத்தினுல் வ்ருத்தியடைந்து மிக வும் ப்ரீதியுடன் கூடியவராகி எங்கள் ஶரீரங்களேயும் வ்ருத்தி செய்ய வேண்டும். நீர் உண்மையாக ஸந்தோஷ மடைந்தபோது உம்மை உபாஸிக்கும் யஜமானருடைய இஷ்டங்களும் ஸத்யமாக ஆகட்டும். [ காண் 4. ப்ர 2. அனு 3. ]

அக்னி கார்யம் செய்யுமிடங்களில் அக்னிக்கு அடுத் தாற்போல் பரிஷேசனம் செய்ய வேண்டியது. பரிஷேச னத்துக்கு வெளியில் பரிதி இருக்கவேண்டும். பரிதிக் கும் வெளியில் பரிஸ்தரண தர்ப்பங்களிருக்கவேண்டும். அதற்கும் வெளியில் அக்நயேநம: என்ற அக்ஷதையால் அர்சசனம் பண்ணவேண்டியது என க்ரமம்.

**அக்னிஸந்தானம்:** எதற்காக எப்போது செய்ய வேண்டும்? என்பதைப் பற்றியதை அறிவோம்.

**கபர்திகாரிகையில் கூறுவது:** ஔபாஸந அக்னி அவிந்து விட்டபோதும், 2 வேளே ஔபாஸந ஹோமம் பண்ணுமல் விட்டுப்போனபோதும் தம்பதிகள் இருவ ரும் வெளியூருக்கு போய் விட்டாலும் ( ஸமுத்ரத்தை அடையும் நதியைத் தாண்டி ஸ்த்ரீ சென்றிருக்கும்போது ஸூர்யனுதயமானுலும் அஸ்தமனமானுலும் இதேபோல் அக்னி இருக்கும் வீட்டுக்கு வெளியிலும் உதயாஸ்த்த

---

பிராணனேவிட மானமே பெரிது. பிராணனே விட்டாவது

மன காலங்களில் பத்நி சென்றுவிட்டாலும்) அக்ஙி நஷ்ட மேற்படும். அப்போது அக்னி ஸந்தானம் செய்துக் கொள்ள வேண்டியது. ஔபாஸனுக்நியில்தான் மாதாபிதாக்கள் முதலியவர்களுடைய ஶ்ராத்தமும், பும்ஸுவனம் ஸீமந்தம் முதலிய கர்மாவும் செய்ய வேண்டும். அந்தந்த கர்மாவுக்காக அன்று செய்யும் அக்னிஸந்தானத்திற்கு நாள் பார்க்க வேண்டியது இல்லை. அந்த கர்மாக்கள் ஆரம்பமாவதற்கு சிலதினம் முன்னடியே செய்யும் அக்னி ஸந்தானத்திற்கு அவஶ்யம் நல்ல நாள் பார்த்து தான் செய்யவேண்டும். ஆகையினுல் நிஷித்த தினங்களைப்பற்றிய விவரமறிந்து தோஷமில்லாத தினத்தில் செய்யவேண்டுமென்பதற்காக அவைகளைக்குறிக்கிறோம்.

**நிஷித்த தினங்கள்:** கண்ட நக்ஷத்ரங்களிலும் வ்யதீபாதத்திலும் வைத்ருதிகளிலும் மாதப்பிறப்பு தினங்களிலும் ஸ்த்ரீ புருஷர்களின் ஜன்ம நக்ஷத்திரத்திலும் அமாவாஸ்யை பௌர்ணமி ப்ரதமை முதலியவற்றிலும் அக்னி ஸந்தானம் நிஷேதிக்கப்பட்டிருக்கிறது. இவை தவிர மற்ற திநங்களில் அக்நி ஸந்தாநம் செய்து ஔபாஸநம் ஸ்தாலீபாகம் செய்து வரவேண்டும்.

இந்த அக்னி ஸந்தாநமும் இருவகைப் படும். காஞ்சி மண்டலத்திலுள்ளவர்கள் செய்யும் விதம் புநஸ்த்வா முதல் பூவஸ்வாஹா வரை அதிகமான பதிமூரு ஹோமங்களுடையது. மற்ற வகை எல்லோருக்கும் ஒரே மாதிரிதான்.

ஸங்கல்பமானதும் ஸ்தண்டிலம் முதலியன செய்து அக்னி ஸித்தியாவதன் பொருட்டு வ்யாஹ்ருதி ஹோமம் செய்து பிறகு உபவாஸமிருக்க முடியாமையினுல் அதற்குப் பதில் ஓர் ஹோமம் செய்வதும் நியாயமே. அக்னி நஷ்டமாகி விட்டால் "தம்பதிகள் இருவரும் ஔபாஸந ஹோமம் பண்ணுமல் சாப்பிடக் கூடாது" என்றும் விதிப்படி உபவாஸமிருக்கவேண்டும். இதை இக்காலத்தில் அனுஷ்டிப்பது மிகவும் சிரமமாயிருப்பதால் ருஷிகள் ஆபத்காலத்தில் சொல்லியிருப்பதை நாம் அனுஷ்டானத்தில் கொண்டு வந்து விட்டோம். நமக்கு எப்போதும் எந்த விதமான ஆபத்தும் காத்துக்கொண்டேதான் இருக்கிறது.

---

**மானத்தை ரக்ஷி. பிராணன் அழியும், மாநம் அழியாது.**

உபவாஸ ஸ்தாநத்தில் **अयाश्च** ஹோமம் செய்ய வேண்டியது. மந்த்ரத்தின் தாத்பர்யமானது:—

ஓ அக்னியே ! நீர் உம்மை உபாஸிப்பவர்க்கு உதவி புரிபவராகவும் களங்கமற்றவராயு மிருக்கிறீர். உண்மையில் அடையத்தகுந்தவராயிருக்கிறீர். இம்மாதிரியாகிய நீர் எங்கள் மனதால் த்யானிக்கப்பட்டு கொடுக்கப்படும் ஹவிஸ்ஸை அந்தந்த தேவர்களிடம் சேர்த்து அருள்வீராக. பக்தர்களுக்கு உதவி புரியும் சிந்தையுள்ள நீர் எங்களுக்கு நல்ல ஔஷதத்தையும் அதன் மூலம் ஆரோக்யத்தையும் கொடுத்து காப்பாற்றுவீராக [மந்திர ப்ர 1. காண் 5]

இதன் பிறகு காஞ்சி மண்டல வாஸிகள் அதிகப்படி செய்யும் ஹோமங்கள் பதினொன்றுக்கும் காரணமும் தாத்பர்யமும் (1) **पुनस्त्वा** இதன் தாத்பர்யத்தை முன்னர் எழுதியிருக்கிறோம். இந்த ஹோமம் அக்னிக்கு அசுசிஸ்பர்ஸம் நேர்ந்திருக்குமானால் அதன் நிவிருத்திக்காகச் செய்வது. (2) **मनो ज्योतिः** மிகவும் பூஜ்யமான அக்னியின் ஜோதிஸ்ஸானது ஹோமம் செய்யும் ஆஜ்யத்தினால் ப்ரீதியடைந்து விட்டுப் போன நம் யக்ஞத்தை (அக்னி கார்யத்தை) சேர்த்துவைக்கவேண்டும். ஸாயங்காலத்திலும் ப்ராதः காலத்திலும் செய்யவேண்டிய ஆஹுதிகளை (நான் செய்யாமல் விட்டுப்போனவைகளை) எல்லாம் இந்த ஆஜ்ய ஹவிஸ்ஸினால் விட்டுப்போகாததாக செய்கிறேன். [காண் 1. ப்ர 5. அனு 10]

(3) **यन्म आत्मनः** எந்தஅங்கமானது தெரிந்தோ தெரியாமலோ குறைந்து விட்டதோ அந்த அங்கத்தை குறைகளையெல்லாம் நன்கு அறிந்த அக்னி அதைப் பூர்ணமாக கொண்டு சேர்க்கவேணும். [கா 3. ப்ர 2. அனு 5.]

(4) **पुनरग्निः** அக்னி கார்யத்தில் சிலஅங்கம் குறைந்தால் யஜமானனின் கண்போய் விடும். ஆதலால் இந்த அக்னி தேவன் குறையைத் தணித்து யஜமானனாயிருக்கும் எனக்கு மறுபடியும் கண்ணைக்கொடுக்கட்டும். இதேபோல் இந்திரனும்ப்ருஹஸ்பதியும் கண்ணைக் கொடுக்கட்டும். தேவ வைத்யரான அஸ்விநீ தேவரும் கண்ணுக்கு பார்க்கும் திறமையைக் கொடுத்து அனுக்ரஹிக்க வேண்டும். [கா 3. ப்ர 2. அனு 5.]

---

**பிராம்மணருக்கு பிராம்மணார்த்தம் உத்ஸவமாகும்.**

# சாந்தோக்ய உபநிஷத்.

கோஶத்தின் கிழக்கு திக்கிற்கு ஜுஹூ எனப் பெயர் (கிழக்கே பார்த்துதான் ஹோமம் நடக்கிறது.) தெற்கிற்கு ஸஹமானா எனப் பெயர். அங்கு யமயாதனை ஸஹிக்கப்படுகிறது. மேற்கிற்கு ராக்ஞீ எனப் பெயர். வருணராஜனும் ஸந்த்யை சிவப்பும் அங்கிருக்கின்றன. வடக்கிற்கு ஸுபூதா எனப் பெயர். குபேரனது செல்வமும் போகமும் அங்கே உள்ளது. இந்த நான்கு திக்குகளின் புத்ரன் வாயு என உபாஸித்தால் நம் புத்ரன் தீர்க்காயுஸ்ஸாக இருப்பான். இதை நன்கு அறிந்தவன் இந்த புத்ரனல் மும்முறை நாஶமில்லா கோஶத்தை அடைகிருன். பிராணன் பூமி அந்தரிக்ஷம் ஸ்வர்க்கமிவைகளை அடைகிறேன் என்கிருன். ஸகல பிராணிகளும் இவனது பிராணன் பூமி அந்தரிக்ஷம் ஸ்வர்க்கம் அக்நி வாயு ஆதித்யன் ரிக் யஜுஸ் ஸாம இவைகளை அடைகிறேன். உபாஸிக்கிறேன் என்பது அதன் பொருளாம்.

**புருஷ வித்யை:** மனிதனுக்கு ஏற்பட்ட வயது நூற்றுபதினறு. இதை நான்காகப் பகுத்து கீழ் கூறியபடி உபாஸிக்கவேண்டும். அதனல் பூர்ண ஆயுஸ்ஸுடன் இருக்கலாம். (இதைத்தான் வேதம் ஶதாயு: புருஷ: என்கின்றது.)

முதலாவது பாகமான இருபத்திநான்கு வயதை இருபத்துநான்கு எழுத்துள்ள காயத்ரியாகவும், அந்த காயத்ரியினல் செய்யத்தக்க ப்ராதஸ் ஸவநமாகவும், அதற்கு தேவதையான ப்ராணமயமான வஸுவாகவும் த்யாநம் செய்யவேண்டும்.

இருபத்து நான்கு வயதிற்குள் உள்ளவனுக்கு ஏதாவது ரோகம் பிராணபயம் நேர்ந்தால் கீழ்க் கண்ட பொருள் உள்ள மந்த்ரத்தை ஜபிக்கவேண்டும். "வஸுரூபமான பிராணனே நான். யாகரூபமானவன். அதில் பிராதஸ் ஸவநம் நடக்கின்றது. மாத்யந்திந ஸவநத்தில் தொடர்ச்சி வேண்டும். இதன் நடுவில் நான் வஸிக்கும்படிச் செய். பிராதஸ் ஸவநத்தின் அதிபதிகளான உங்களுடன் நானிருக்கும் பொழுது நான் மரணமடையாதிருக்கும்படி செய்யுங்கள்.

---

பசுவுக்குப் புதுப்புல் உத்ஸவமாகும்.

### மந்த்ரம்.

**प्राणा वसवः इदंमे प्रातस्सवनं माध्यन्दिनं सवनं अनु सन्तनुतेति माहं प्राणानां वसूनां मध्ये यज्ञो विलो पत्सीय ॥**

*ப்ராணாவஸவ: இத$^{3}$ம்மே ப்ராதஸ்ஸவநம் மாத்$^{4}$யந்தி$^{3}$நம் ஸவநம் அநுஸந்தநு தேதி மாஹம் ப்ராணாநாம் வஸூநாம் மத்$^{4}$யே யக்ஞோ விலோ ப்த்ஸீய ॥*

இருபத்தைந்து முதல் நாற்பத்தி நான்கு வயது வரை மாத்யந்திந ஸவநம். அது நாற்பத்து நான்கு எழுத்துள்ள திருஷ்டுப் சந்தஸ். அதில் பிராம்மண மயமான ருத்ரர்கள் அதிதேவதை, என உபாஸிக்கவேண்டும்.

இந்த யௌவந காலத்தில் விஷயங்களில் விருப்பமிருப்பதால் அதனால் அழுகை உண்டாவதாலும் ப்ராணன் உக்ரமயமான ருத்ரர் எனப்படுகிறார்.

முன் போல் அந்த வயதில் பிராண பயம் ரோகம் முதலியன வந்தபோது கீழ்கண்டபடி ஜபிக்கவேண்டும்.

**प्राणा रुद्रा इदंमे माध्यन्दिनं सवनं तृतीयसवन मनुसन्तनुतेति माहं प्राणानां रुद्राणां मध्ये यज्ञो विलो प्त्सीय ॥**

*ப்ராணா ருத்ரா இதம்மே மாத்யந்திநம் ஸவநம் த்ருதீய ஸவநமநு ஸந்தநு தேதி மாஹம் ப்ராணாநாம் ருத்ராணாம் மத்யே யக்ஞோ விலோ ப்த்ஸீய ॥*

முன்போலவே பொருள். நடப்பது மாத்யந்திந ஸவநம். த்ருதீய ஸவனத்தில் தொடர்பு வேண்டும். ருத்ர தேவதை ப்ராணன் என்பது மாத்ரம் விசேஷமாம்.

நாற்பத்தெட்டாவது வயதில் நாற்பத்தெட்டெழுத்துள்ள ஜகதீசந்தஸ். அதனால் செய்யத்தக்கது த்ருதீய ஸவநம். பிராணனே ஆதித்யன். இந்த வயதில் ஏதேனும் நோய் ஏற்பட்டால் இதம்மே என்ற மந்திரத்தை ஜபிக்கவேண்டும். இந்த உபாஸனையால் ரோகம் அகலும், இதரிர் என்பவரின் புத்ரராகிய மஹிதாஸர் என்பவர் இதைக் கூறினார். இங்ஙனம் உபாஸித்து நூற்றுப் பதினாறு வயது ஜீவித்திருந்தார். இதை நன்கு அறிந்தவனும் அவ்வளவு காலம் ஜீவித்திருப்பான்.

---

# அஷ்டாவக்ர கீதை.

மோக்ஷத்தில் கூட யாருக்கு விருப்பில்லையோ தேஹத்தில் கூட இது என்னுடையது என்ற எண்ணமில்லையோ அப்படிப்பட்டவன் க்ஞான மார்க்கத்திற்கும் யோகத்திற்கும் தகுதி உள்ளவனாக மாட்டான். கேவலம் துக்கத்தைத்தான் அநுபவிப்பான். (ஆரம்ப காலத்தில் மநிதனுக்கு மோக்ஷத்தில் பேரவா வேண்டும். இந்த, என்னுடைய உடல் பிறவி முதலிய துக்கத்திற்கு ஆளாகாமல் இருக்க வேண்டும் என்ற எண்ணம் வேண்டும்.)

சிவனே நேரில்வந்து உபதேசித்தாலும் விஷ்ணுவே உபதேசித்தாலும் பிரும்மா உபதேசித்தாலும் எல்லாவற்றையும் மறந்தவனுக்கே ஶாந்தி ஏற்படும். மற்றவனுக்கில்லை ஶாந்தி.

***17-ம் அத்யாயம்:*** உள்ளதைக்கொண்டு திருப்தி அடைபவன், இந்த்ரியங்களை அடக்கினவன், ஏகாங்கியாக இருந்து ஸந்தோஷப் படுபவன் யாரோ அவன்தான் க்ஞானபலத்தை அடைந்தவன். அவனே யோகபலனைப் பெற்றவனாவான்.

ஆத்ம தத்வத்தை நன்கு உணர்ந்தவன் துக்கமயமான இந்த உலகத்தில் ஒருபோதும் துக்கப்படமாட்டான். ஏனெனில் அவன் ஒருவன்தானே பிரும்மாண்ட மண்டலமாய் இருப்பவன்.

எப்போதும் எந்த விஷயமும், தன்னிடமே ஸந்தோஷங்கொண்டுள்ள க்ஞானிக்கு ஸந்தோஷமளிப்பதில்லை. நல்ல ருசியான ஸல்லகி துளிரை சாப்பிடும் யானைக்கு வேப்பம் இலை இன்பமளிக்குமா ?

தான் அநுபவித்த ஸகல போகங்களிலும் பற்றில்லாதவன், அந்த வாஸனையை அறவே துறந்தவன், அநுபவிக்காத போகங்களில் சிறிதுகூட ஆசை இல்லாதவன், உலகில் மிக துர்லபமானவன்.

சிலர் ஸம்ஸார ஸுக அநுபவத்தில் ஆசை கொண்டவர். சிலர் மோக்ஷத்தில் ஆசையுள்ளவர். இரண்டிலும் பற்றற்ற மஹாநுபாவன் மிகதுர்லபமானவன். தர்மார்த்த காமமோக்ஷம், ஜீவித்திருக்க ஆசை, விரைவில் இறந்தால் நல்லதென்ற ஆசை, இத்தகைய விருப்பு வெருப்பில்லாத நிலை உதார சித்தமுள்ள ஒருவருக்கே உண்டாகும்.

---

**எனக்கு உத்ஸவம் யுத்தமே என்றார் அர்ஜுநன்.**

பொய்யான துக்கமயமான இந்த உலகம் எப்போது ஒழியும்? என்று அதில் த்வேஷமும் அதில் ஆசையும், தனது வாழ்விலும் அதேபோல் நீண்ட நாள் வாழ வேண்டும், அல்லது விரைவில் இறக்கவேண்டும் என்ற எண்ணமுமின்றி ஸுகமாக இருப்பவனே தன்யனுவான். தனக்குண்டான க்ஞாநத்தினுல் நான் கிருதார்த்தனுனேன் என்ற எண்ணத்தையும் மறந்து மற்றவரைப்போல் உலகில் ஒன்றைப் பார்த்துக் கொண்டும் கேட்டும், ஸ்பர்சித்தும் முகர்ந்தும் உண்டும் ஸுகமாக வஸிப்பான் க்ஞாநி.

ஸம்ஸார ஸாகரம் ஓய்ந்தபின் ஒரு நோக்கமில்லாத பார்வை! ஏதோ ஒரு வேலை! மற்ற இந்த்ரியங்களும் ஏதோ ஒன்றை கவனிப்பது! ஆசையின்மை முதலிய நிலைத் தோன்றும்.

முக்தி பெற்றவன் நிலை, இவன் விழித்திருக்கிருன் என்ருே தூங்குகிருன் என்ருே கண்களை மூடுகின்ருன், திறக்கின்ருன் என்ருே சொல்ல இயலாது. எதிலும் பரவசனைப் போலிருப்பான்.

எங்கும் ஸௌக்யமாகக் காணப்படுவான். எந்த இடம் சென்ருலும் மநம் கலங்காமல் தெளிவாக இருக்கும். ஒரு வாஸனையும் மநதிலிராது. எங்கும் ஸந்தோஷமாக இருப்பான் முக்தன்.

எதைப்பார்த்தாலும் கேட்டாலும் தொட்டாலும் முகர்ந்தாலும் புஜித்தாலும் பேசினுலும் எதை வாங்கினுலும் எங்கு சென்ருலும் முக்தனுன மகா புருஷன் விருப்பு வெருப்பில்லாமலிருப்பான்.

முக்திபெற்றவன் எதையும் நிந்திக்கமாட்டான். எதையும் துதிக்கமாட்டான். எதிலும் ஸந்தோஷமடைய மாட்டான். யாரிடமும் கோபிக்க மாட்டான், எதையும் யாருக்கும் தாநம் செய்யமாட்டான். எதையும் வாங்கமாட்டான் எதிலும் பற்று கொள்ளமாட்டான்.

முக்தனுன மகான் அகில ஆபரணங்களையும் அணிந்து ஆசையுடன் அப்ஸரஸ் போன்ற ஸ்த்ரீ தன்னை ஆலிங்கனம் செய்துக்கொண்டாலும் மகா கோரமான மிருத்யு வந்து ஆலிங்கனம் செய்துக் கொண்டாலும் மநம் மாருமலிருப்பான்.

---

பிறர் மனைவியைத் தாய்போல் பார்ப்பவனும்

# பால பாரதம்.

கே: காந்தாரி அளித்த ஶாபத்தைப் பெற்று பகவான் திரும்பினதும் என்ன நடந்தது?

ப: அச்வத்தாமா கிருபருடனும், கிருதவர்மாவுடனும் துர்யோதனன் அருகே வந்து அவன் நிலையைக் கண்டு வருந்தினர். இரவில் பாண்டவர்களைக் கொல்வதாக அவனிடம் ப்ரதிக்ஞை செய்தார்.

கே: துர்யோதனனே சில நிமிஷங்களில் பிராணனை விடப்போகிறான். பாண்டவர்களைக் கொல்வதால் பயனென்ன?

ப: பாண்டவரைக் கொல்வேனென்று கேட்ட அளவில் துர்யோதனனுக்கு ஸந்தோஷம் ஏற்படும். அச்வத்தாமா சொன்னவண்ணம் செய்வானென அவனிடம் நம்பிக்கையும் உண்டு. ஆதலால் கிருபரைக் கொண்டு அவருக்கு ஸேனாபதி பட்டாபிஷேகம் செய்வித்தான் துர்யோதனன்.

கே: அழகுதான். ஸேனை எங்கே? ராஜா எங்கே? நியாபகம் வந்தது. இதிலிருந்துதான் அந்த்ய காலத்தில் அச்வத்தாமாவுக்குப் பட்டம் சூட்டியது போல் என்ற பழமொழி ஏற்பட்டதோ. அவர் என்ன ஸாதித்தார்?

ப: இதிலிருந்து ஸௌப்திக பர்வா ஆரம்பம். எல்லோரும் தூங்கும்போது ஸுலபமாகப் பாண்டவரைக் கொல்லலாமென அச்வத்தாமா கருதினர். இரவில் தூங்கும் காக்கைகளை அடித்துக் கொல்லும் ஒரு கோட்டானைக் கண்டார். இப்படித்தான் நானும் செய்ய வேண்டுமென்று நிச்சயித்தார்.

கே: தூங்குபவரைக் கொல்வது ஸுலபம். பகவான் பாண்டவர்களை எப்படிக் காக்கப்போகின்றார்?

ப: பாண்டவர் ஐவரையும் அழைத்துக்கொண்டு இரவில் பகவான் ஓர் நதி தீரத்திற்குச் சென்று ஆங்கு உறங்கினர்.

கே: நல்ல காலம்! அச்வத்தாமா என்ன செய்தார்?

---

பிறர் பொருளை த்ருணமாகப் பார்ப்பவனும்

ப : சிவனை ஆராதித்து அரிய சக்திகளைப் பெற்று தூங்குகின்ற த்ருஷ்டத்யும்னனையும் இளம் பாண்டவர் ஐவரையும் கொன்ருன். அந்த கூடாரத்திலிருந்து பயந்து ஓடினவர்களை க்ருபரும், க்ருதவர்மாவும் கொன்றனர். இச் செய்தியை துர்யோதனனிடம் அறிவிக்கும்வரை அவன்ப்ராணனுமிருந்தது.

கே : பாண்டவரைக் கொல்லவில்லை, இளம் பாண்டவரையே கொன்ருரென்பது துர்யோதனனுக்குத் தெரியுமோ ?

ப : இளம் பாண்டவர்கள் தலைகளைத் துர்யோதனனிடம் காட்டியதாகவும் அந்தகாலத்தில் நல்லெண்ணம் தோன்றி "எனக்கு எள்ளும் ஜலமும் அளிக்கும் இவர்களைக் கொன்று விட்டாயா?" என்று வருந்தியதாகக் கூறுவர்.

கே : இளம் பாண்டவர் இறந்ததைக் கண்டு பாண்டவர் என்ன செய்தனர் ?

ப : கோபம்கொண்ட பீமன் அச்வத்தாமாவின் தலையை அறுத்து திரௌபதியிடம் தருவதாகக் கூறி ஓடினுன். கிருஷ்ணன் அச்வத்தாமனது வீர்யத்தையும் அயோக்யத் தனத்தையும் கூறி பீமனைத் தனியாக விடாமல் அவனைக் காக்க எல்லோரும் போவோம் வாருங்கள் என்று அவனுடன் சென்றனர்.

கே : அச்வத்தாமா அச்சமயம் என்ன செய்தார் ?

ப : தான் செய்த பாபகர்மா மனதை அறுக்க, கங்கா தீரத்தில் உள்ள வியாஸர் அருகில் சென்று வருந்திஞர். பாண்டவர் கோபாவேசத்துடன் வருவதைக் கண்டு, பயந்து பாண்டவப் பூண்டே இல்லாதபடி அழிக்க ப்ரம்மசிரோஸ்த்ரத்தைப் பிரயோகித்தார். கிருஷ்ணனது ஆணையால் அர்ஜுனன் அதற்கேற்ற ப்ரம்ம சிரோஸ்த்ரத்தையே பிரயோகித்தான்.

கே : ப்ரம்மாஸ்த்ரத்தை விட, ப்ரம்ம சிரோஸ்த்ரம் மிக உக்ரமானதல்லவா ?

ப : ஆமாம் அதனுல் உலகிற்கே பேராபத்து வரும் என்று உணர்ந்து நாரதரும் வ்யாஸரும் அந்த அஸ்த்ரத்தைத் திரும்பிப் பெறும்படிக் கூறினர்.

---

**ஸர்வ பூதங்களையும் தன்னைப்போல் பார்ப்பவனும்**

கே : திரும்பப் பெற்றனரா இருவரும் ?

ப : பிரும்மசர்ய நியமத்துடன் இருந்ததால் அர்ஜுநன் அங்ஙனம் செய்தான். அச்வத்தாமாவினல் அது முடியவில்லை. அவருக்கு பிர்ம்மசர்ய நியமமில்லை.

கே : அப்பொழுது பாண்டவர்கள் கதி என்னவாயிற்று.

ப : பகவான் அவர்களைக் காப்பாற்றி உத்திரையின் வயிற்றிலுள்ள பரீக்ஷித்தையும் தான் காப்பதாக வாக்களித்தார்.

கே : இருவர்களது யுத்தம் எப்படி முடிந்தது ?

ப : அச்வத்தாமா சிரசீவியானதால் அவன் தலையில் இயற்கையாக உள்ள மணியை அபஹரித்தால் போதுமென பகவான் கூற அங்ஙனமே செய்தார்கள். புத்ர சோகத்தினல் வாடும் திரௌபதியினிடம் சத்ருவின் தலைக்கு பதில் அவனது தலை மணியைத் தந்தார். திரௌபதியின் விருப்பப்படி தர்மர் அதைத் தலையில் அணிந்தார்.

கே : பாரத யுத்தம் முடிந்த பிறகு பெரும் பாலும் பல புருஷர்கள் இறந்ததால் ஸ்த்ரீகள் தான் அதிகம் இருந்திருப்பார்கள் அல்லவா ?

ப : ஆமாம் அதனல்தான் இது முதல் **ஸ்த்ரீ பர்வா** எனப் பெயர் வழங்கப்பட்டது.

கே : த்ருதராஷ்டரன் மிக்க துக்கத்திற்கு ஆளானனல்லவா ! அவன் கதி என்ன ஆனது பாபம் ?

ப : 100 பிள்ளைகளைப் பெற்று கொள்ளிக்குப் பிள்ளையில்லாத அவரை விதுரர், வ்யாஸர், ஸஞ்ஜயர் முதலிய அனைவரும் ஸமாதாநப் படுத்தினர்கள்.

கே : பாண்டவர் த்ருதராஷ்ட்ரனைச் சந்தித்தார்களா ?

ப : சந்திக்கும்படிச் செய்து ஆங்கொரு ஆபத்திலிருந்து பகவான் பாண்டவர்களைக் காப்பாற்றினர்.

கே : அது எப்படி ? கூறு, கூறு கேட்போம் ?

ப : கிருஷ்ணன் தர்மரை முதலில் த்ருதராஷ்ட்ரன் திருவடிகளில் வணங்கும்படி செய்தார். உள்ளே கோபமும் துக்கமும் இருந்தாலும் வெளியில் அவர்

---

ஜெயித்த ஸந்தோஷத்தைக் காட்டி " இனி எனக்கு நீ தான் கதி " என்று ஆசிர்வதித்தார் அன்புள்ள வர்போல்.

கே : தனது நூறு புத்ரர்களையும் கொன்ற பீமன் வரும் பொழுது அவர் வயிறு எரியுமே !

ப : எரிச்சலுடனு? இவர் என்ன செய்வர் என்பதை யுணர்ந்த கிருஷ்ணன் இரும்பினுல் பீமனைப்போல் ஏற்கெனவே ஓர் உருவத்தை அமைத்து பீமனை அவரிடம் போகாமல் நிறுத்திக் கண்ணில்லாத அவனிடம் " இதோ வந்து வணங்குகிறுன் பீமன் " என்று கூறினுர்.

கே : த்ருதராஷ்டிரன் என்ன செய்தான் ?
ஆத்திரத்துடன் கட்டிக் கொள்வது போல் கட்டிக் கொண்டு அந்த இரும்பு விக்ரஹத்தையே தூள் தூளாக்கும்படிச் செய்தான். பீமனும் என் புத்ரன் போல் இறந்தான் என்று உள்ளே ஸந்தோஷம் அடைந்தான்.

கே : ஸ்ரீ கிருஷ்ணன் இல்லாவிடில் பாரதமே இல்லை. பாண்டவர் எப்போதோ அழிந்திருப்பர். யாருக் குத் தெரியும், த்ருதராஷ்டரன் கெட்டஎண்ணமும் பலமும் ? மற்றவரும் வணங்கி இருப்பர். பிறகு என்ன நடந்தது ?

ப : மமப்ராணுஹி பாண்டவா: என்று குந்தியிடம் கூறி னுரல்லவா ? நம் போன்றவர் நம்ப்ராணனைக் காக்க எவ்வளவு பாடுபடுவோமோ அவ்வளவு பாடுபட்டு பாண்டவரை ரக்ஷித்தார். காந்தாரீ பாண்டவரைச் சபிக்க நினைத்தாள். இதை அறிந்த பகவான் ஸ்ரீ வேதவ்யாஸரை அழைத்து காந்தாரி யை ஸமாதானப் படுத்தினுர்.

கே : காந்தாரியைப்போல் தானே திரௌபதியும் புத்ரர் களை இழந்தாள் ? அவளுக்கு துக்கமிராதோ ?

ப : காந்தாரி குந்தி இருவருமாக வந்து திரௌபதியை யும் ஸுபத்ரையையும் ஸமாதானப் படுத்தினுர்கள்.

---

**உடல் அநித்யம், செல்வம் சாச்வத மல்ல.**

# உபமன்யு பக்த விலாஸம்.

## நீலநக்நர் (ஆனிமீ தொடர்ச்சி)

மனைவியின் செயல் குற்றமல்ல என மகிழ்ந்து அவளுடன் புறப்பட்டார். ஒருநாள் க்ஞான ஸம்பந்தர் அடியார் கூட்டத்துடன் நக்நர் வீட்டிற்கு வந்தார். இவர் எல்லோரையும் வரவேற்று நன்கு உபசரித்தார். இக்கூட்டத்தில் பாணர் என்ற தாழ்ந்த வகுப்பார் இருந்தார். ஸம்பந்தர் கோரியபடி அவருக்கும் பூஜை செய்து, தனது அக்னிஹோத்ர கிருஹத்திற்கு அருகே படுக்கவும் இடம் அளித்தார் அவருக்கு.

இவரது பக்தியைக்கண்டு இறைவன் மகிழ அக்னிப்ரதக்ஷிண ஜ்வாலையால் தனது ஸந்தோஷத்தையும் வெளிப்படுத்திற்று. (இந்த அம்சம் ஸம்ஸ்கிருதமூலக்ரந்தத்தில் காணப்படவில்லை) ஸம்பந்தருடன் சில காலம் தங்கி அவரது திருமணத்தைத் தர்சித்து பகவான் திருவடியை யடைந்தார்.

## 28. நமிநந்தி அடிகள்.

சோழ நாட்டிலே ஹேமபுரம் எனும் ஏமாப்பூரில் சிவத்விஜர் வம்மசத்தில் தோன்றியவரிவர். விபூதி அணிவதும் திருவாரூர் சென்று ஸேவிப்பதுமே இவர் கைப்பற்றிய தவம். ஒருநாள் அரன்நெறி என்ற ஆலயம் சென்றார். அங்கு தீபம் இல்லாததைக் கண்டு வருந்தி அருகிலுள்ள வீட்டிற்குச் சென்று நெய்யும் தீபமும்வேண்டினர். அதுசமணர் வீடு. அவர் கேலியாக சிவன் கையில் தான் தீ இருக்கின்றதே! அவருக்கு எதற்காக தீபம்? இங்கு நெய்யில்லை. நீர்தானுண்டு. அதைக் கொண்டு தீபம் ஏற்று என்றனர். அடியார் மனம் நொந்து ஸந்த்யா காலத்தில் சிவதர்சநமின்றி அந்நாள் வீணுகுமே! என வருந்தினர். "நீரைக் கொண்டே தீபம் ஏற்று, எரியும்" என்று ஆகாசத்திலே ஒரு சப்தம் தோன்றிற்று இது ஆகாசம்போல் அநாதியாய் எங்குமுள்ள இறைவன் ஆணை என அங்ஙனமே செய்தார். நெய் தீபத்தைவிட அது பிரகாசமாய்எரிந்தது. அன்றன்றும் அங்ஙனமே ஏற்றினர்.

---

*யமன் எப்போதும் வரலாம், தர்மம் செய்—ஸஹதேவன்.*

சமணர் ஆக்ஷி அகன்றது. சோழராஜன் சைவனுனன். எல்லா வகையிலும் சிவாலயத் தொண்டு புரிய நமிநந்தியே சிறந்தவரென அரசன் அவரை ஆலய அதிகாரி யாக்கினுர். ஆலயச் சிறப்புப்பற்றி கூறவும் வேண்டுமா ?

ஒருநாள் இவர் திருவாரூருக் கருகே உள்ள திருமணலி என்ற விடத்திற்கு தியாகராஜர் எழுந்தருளும் உத்ஸவ தர்சநத்திற்குச் சென்று திரும்பினுர். இரவு வெகு நேரமானதால் திண்ணையிலேயே படுத் துறங்கினுர். பதி வரவில்லேயே என ஸதி தூங்காமலிருந்து கதவைத் திறந்தாள். திண்ணையில் படுத்து உறங்கும் பதியைக் கண்டாள். நாத! இரவு சிவபூஜை செய்யவில்லேயே என்ருள். உத்ஸவத்தில் பல ஜாதியினரும் இருந்தனர். அவர்கள் மீது பட்டு ஸ்நாநம் செய்யாமல் எப்படி சிவனைத் தொடுவது என்று படுத்தேன் என்ருர்.

ஆனுல், நீராடி அர்ச்சிக்கலாமே என ஜலம்கொண்டுவர உட்சென்ருள். அதற்குள் தியாகேசன், "கமலாலயத்தில் ஜநித்த அனைவரும் சிவகணமே. நாளை அதைக் காண்பாய்" என்ருர். நமிநந்தி அபசாரம் என எழுந்து விதிப்படி சிவபூஜை செய்து உறங்கினுர். மறுநாள் காலையில் ஆலயம் செல்ல வீதியில் நடமாடும் அனைவரும் சிவ கணமாகத் தோன்றி மறைந்தனர். அன்றுமுதல் திருவாரூரிலேயே வஸித்து தொண்டாற்றி சிவனடி சேர்ந்தார்.

"கமலாலயத்தில் பிறப்பதாலும் சிதம்பரத்தை தர்சநத்தாலும் அருணுசலத்தை ஸ்மரிப்பதாலும் காசியில் மரிப்பதாலும் முக்தி."

## 29. திருக்ஞானஸம்பந்தர்.

சோழநாட்டிலே பிரும்மபுரம் என்ற சீர்காழியில் கௌண்டின்ய கோத்ரத்தில் சிவபாதஹ்ருதயர் என்ரோர் வேதியரிருந்தார். சிவனது திருவடி ஸதா அவரது ஹ்ருதயத்தில் இருக்கும். ஆதலால் இந்த காரணப் பெயர் பெற்ருர். அதே அவரது சிவபக்தியை வெளியிடும். பகவதீ என்ற பத்நியுடன் சிவபக்தி செய்து இல்லறத்தையும் செவ்வனே நடத்தி வந்தார். அந்த திவ்யக்ஷேத்ரத்தில் பிரும்மபுரீச்வரர், தோணியப்பர் (த்ரோணீ

புரேஸர்) சட்டயப்பர் (வடுக பைரவர்) என ஒன்றின்மேல் ஒன்ருக மூன்று சிவஸன்னதிகள் உண்டு.

இந்த தம்பதிகள் தோணியப்பரை ஆராதித்து அவர் அருளால் ஒரு ஆண் குழந்தையைப் பெற்ருர்கள். இவர் ஸுப்ரமண்யனது அவதாரம் என்பார்கள். குழந்தைக்கு மூன்ருண்டுகளாயின. ஒருநாள்பெற்ரேர் குழந்தையுடன் ஆலயஞ் சென்ருர்கள். கரை மீது குழந்தையை உட்கார வைத்துவிட்டு தடாகத்தில் இறங்கி நீராடினுர்கள். சிறிது நேரமானதால் குழந்தை அம்மா, அப்பா என அழுதது. உலகத் தந்தை தாயான தோணியப்பனும் தேவியும் விரைந்து குழந்தையருகே வந்தார்கள். பரிவுடன் முலைப்பாலளித்தாள் பார்வதி அன்னை.

அழுதபிள்ளை பால் குடித்தது. அது ஸாமான்ய பாலா? க்ஞாநப்பால்! சிவபாதர் குழந்தை மார்பில் பால் சிந்தி இருப்பதைக் கண்டார். குழந்தாய்! யார் உனக்குப் பால் தந்தது? என்ருர். "தோடுடைய செவியன்" என்ற பாட்டின் மூலமாக தோணியப்பனைச் சுட்டிக்காட்டினுர். [ஸௌந்தர்ய லஹரியில் ஆதி சங்கரர் இதை – தவஸ்தன்யம் – என்ற சுலோகத்தால் விளக்குகிருர்.] குழந்தைக்கு சிவக்ஞாந ஸம்மந்தர் எனப் பெயர் வழங்கிற்று. சிவனடியார் அனைவரும் இவரைப்புகழ்ந்துக்கொண்டாடி தெய்வப் பிறவி இவர் என அவரைச் சூழ்ந்து நின்றனர். தந்தையும் பேராநந்தமடைந்து ஸம்பந்தரைத் தோளில்தூக்கி அவர் விரும்பும் கோயில்களுக் கெல்லாம் சென்ருர்.

சீர்காழிக்குச் சிறிது மேற்கேயுள்ள திருக்கோலக்கா என்ற ஆலயம் சென்று அங்கு அழகிய பாக்களைப் பாடும்போது குழந்தை கையால் தாளம் போட்டார். இதைக் கண்ட இறைவன் பொன்னுல் ஆகிய தாளத்தைத் தந்தருளினுர். ஒவ்வொரு க்ஷேத்திரத்திலிருந்தும் சிவனடியார் கூட்டம் இவரைத் தத்தம் ஊருக்கு அழைத்தனர். திருநீலகண்ட யாழ்ப்பாணர் இவரை ஸேவித்து அவர் பாட்டை வீணையில் சேர்த்துப் பாடினுர். தில்லை நடராஜனைத் தர்சிக்க அவா கொண்டு வேத நெறி வேள்வி நிறைந்த மூவ்வாயிரத்தவர் முன்செல்ல சிறிது யோசித்தார். (தொடரும்.)

---

கண்டாலும் காணலாம் ஸ்த்ரீ மநதை அறிய முடியா.

# கங்கா தத்தன்.

பாரதகேஸரி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

பரத வம்சத்தில் ப்ரதீபன் என்ற ஓர் அரசன் கங்கைக் கரையில் தவம் செய்து கொண்டிருந்தான். அந்த சமயம் கங்காதேவி அழகிய கன்னிகையின் உருவம் கொண்டு எதிரே தோன்றினுள். அப்பெண் யார் என்று அரசன் அறியுமுன்னே, தவநிலையில் அமர்ந்துள்ள அவன் அருகில் வந்து, அவனை அணைத்துக் கொண்டு அவனது வலது மடியில் ஸ்வாதீனமாக உட்கார்ந்து கொண்டாள். தன்னை பாரியையாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்றும் வேண்டினுள். அரசன் திகைத்துப் போனுன். தருமமும் நியமும் பிசகாத ப்ரதீபனை, இவ்வணங்கின் அழகும், ஸாஹஸமும் அசைக்கவில்லை. தான் தேவகன்னிகை என்றும் தன்னை ஏற்பதால் எந்த தோஷமும் சம்பவிக்காது என்று மீண்டும் அப்பெண் கெஞ்சினுள். அரசன் சொன்னுன். "பெண்ணே, உன்னிடத்தில் என் மனம் ஈடுபடவில்லை. அன்றியும் உன்னை வரிக்கக்கூடியவன் நானல்லன். அதற்கேற்ப, உன் நடத்தையும் இதை நிரூபித்து விட்டது. பார், இதோ நீ என் வலது தொடையில் அல்லவா உட்கார்ந்திருக்கிருய்! வலது தொடையில் உட்காரவேண்டியவள் குமாரி, (கன்னிகா தானம் செய்து கொடுக்கப்படுபவள்). இடது தொடை தான் மனைவி அமரும் இடம். இது தரும நூல் சொல்லுவது. அதனுல் நீ என் புதல்வனை மணந்து எனக்கு மருமகளாக வரவேண்டும்." கங்கையும் ஒருவாறு சம்மதித்தாள்.

★ ★ ★

முன்பு ஒரு சமயம் பிரும்மசபை கூடிற்று. அங்கு எல்லோருடன், பூலோகத்தில் இக்ஷ்வாகு வம்சத்தவ

---

*துர்பிக்ஷகாலத்தில் அன்னதானம் செய்வது*

ஞன மஹாபிஷக் என்ற பேரரசனும் விளங்கினுன். ஒருநாள் கங்கை அந்த சபைக்குள் ப்ரவேசித்தாள். காற்றில் தன் உடை கலேயக் கலேய அங்கு வந்து கொண்டிருக்கும் கங்கையைக் கண் கொட்டாமல் பார்த் திருந்தான் இந்த மஹாபிஷக். இதை பிரும்மா கவனித் தார். ' அப்பனே, இது பிரும்ம சபை. இங்கு வர அனு மதி பெற்றவன் காமஸுகாதிகளே ஜயித்தவன். நீயோ அவைகளே இன்னும் ஜயிக்கவில்லே என்று தெரிகிறது. மறுபடியும் பூமியில் பிறந்து, காமஸுகங்களே அனுபவித் துப் பிறகு வரலாம், போய்வா ' என்று அவனே சபை யிலிருந்து விலக்கி விட்டார். தன் எழிலேக்காட்டி, பிறர் மனத்தை மாறுபடச் செய்த குற்றத்திற்காக, கங்கையாக இருந்தாலும் அவளேயும் தண்டித்தார். " நீ பூமியில் இந்த அரசனேயே மணந்து பிள்ளேகளேப் பெற்று, பிறகு ஸ்வர்க்கம் சேருவாய் " என்ருர். அந்த அரசனே ப்ரதீபனின் புத்ரஞன சந்தனுவாகப் பிறந் தான். தன்ஞல் பதவி நீங்கின மஹாபிஷக்கிற்காக வருந்தி கங்கையும் புவியில் அவதரிக்க எண்ணம் கொண்டு வந்தாள்.

கங்கை, வருகிற வழியில் அஷ்டவஸுக்களே சந்தித் தாள். நிறம் குன்றி மேனிவாடி தன்முன்னே ஏக்க முடன் நின்ற இந்த தேவதைகளே கங்கை பரிவுடன் விசாரித்தாள். அவர்களும் தங்களுக்கு ஏற்பட்ட விபத் தைச் சொன்ஞர்கள். வஸிஷ்டருடைய ஆச்ரமத்திற்கு ஒருசமயம் அதிதிகளாக வந்தார்களாம். அவர்களில் " த்யோ " என்ற எட்டாவது வஸு தன் மனேவியின் விருப்பத்தை நிறைவேற்ற, வஸிஷ்டரின் ஹோம பசு வான நந்தினி என்ற காமதேனுவைக் கபடமாகக் கவர்ந் தான். வஸிஷ்டர் அறிந்து சபித்தார். சாபம், திருடிய வனே மாத்திரம் அன்றி அவன் கூட்டாளிகளான மற்ற ஏழு பேர்களேயும் பீடித்தது. " நீங்கள் புவியில் பிறக்கக்

---

*ஸுபிக்ஷமான காலத்தில் ஸ்வர்ண தானம் செய்வது*

கடவீர்கள்" என்பதே அந்த சாபம். இவ்வாறு வஸுக்கள் தங்கள் வரலாற்றை கங்கையிடம் தெரிவித்து, கங்கையைத் தங்கள் அன்னையாகத் தோன்ற வேண்டிக்கொண்டனர். பிறந்தவுடனேயே தங்களுக்கு மனுஷ்ய ஜன்மத்திலிருந்து விடுதலை அளித்துவிட வேண்டும் என்றனர். கங்கையும் தன் கதியையும் (அவர்களின் வினையின் போக்கையும்) நினைந்து புன் முறுவலுடன் இசைந்தாள்.

★ ★ ★

பரத குலத்தில் ப்ரதீப ராஜனுக்கு வெகு காலம் ஸந்ததி ஏற்படாமல் இருந்து அவனுடைய வயோதிக காலத்தில் ஒரு ஆண் ஸந்ததி உண்டாயிற்று. சாந்தமடைந்திருந்த காலத்தில் தோன்றினவன் என்பதால் இவனை சந்தனு என்ற பெயர் சூட்டி அழைத்தனர். தக்க பருவத்தில் தனயனுக்கு அரசு முடிசூட்டி ப்ரதீபன் வனம் சென்றான். சந்தனுவும் தன் தந்தையின் ஆணைப்படி இப் பரத கண்டத்தை செவ்வனே அரசு புரிந்து வந்தான். வேதங்களில் நல்ல தேர்ச்சி பெற்று, ராஜ தர்மங்களை நன்கு அறிந்து, அனுஷ்டித்து, மற்ற அரசர்களை வென்று, தன்னடிக்கீழ் அவர்களைப் பணிய வைத்து, நல்லாட்சி முறைமை கைவிடாமல், யாரும் பயமின்றி சுகமாக வசிக்கும் வகைசெய்து, எல்லோ ராலும் போற்றப்பட்டான்.

ஒரு நாள் கங்கைக்கரை ஓரத்தில் உள்ள நந்த வனங்களில் அரசன் சந்தனு உல்லாச வேட்டையாடி வந்தான். அது சமயம் தன் எதிரே சௌந்தரியவதி ஒருவளைக் கண்டான், பரவசமடைந்தான். அந்த ரூபவதி வேறு யாருமல்ல, கங்கையே. அதை அறியாத மன்னனும் கங்கையை நாடி தன் விருப்பத்தைத் தெரிவித்து அவளைத் தன் மனைவியாக வேண்டும் என்று இறைஞ்சி வேண்டினான். கங்கை சம்மதித்தாள். ஆனால் ஒரு நிபந்தனை விதித்தாள். தன்னை யார்? என்று அர

---

*யுத்தத்தில் வீரன், கடனில் சுத்தமாக இருப்பவன்*

சனே மற்றும் அவனைச் சேர்ந்தவர் யாரும் வினவலாகாது. தான் எது செய்தாலும், அது ஏன்? எதற்கு? என்று கேட்டுத் தடை சொல்லக்கூடாது. இந்த நியமம் தவறினால் அரசனைத் தான் விட்டு விட்டுச் செல்ல நேரும். அரசன் அந்த சமயத்தில் யோசிக்கக் கூடியவனா? உடனே ஆமோதித்து அவளை மணந்துகொண்டு வெகு காலம் ரமித்துக்கொண்டிருந்தான். கங்கையும் தான் தேவமங்கை என்பதை மறந்து அரசனுக்கு ஏற்ற மனைவியாக இருந்து அவனை சிற்றின்ப வெள்ளத்தில் மூழ்கடித்தாள். நாளடைவில் கங்கைக்குப் பிள்ளைப் பேறு உண்டாயிற்று. எண்ண முடியாத லாவண்யம் நிறைந்த அந்த ஆண்மகவை கங்கை கையில் ஏந்தி சந்தனு பார்த்திருக்கையிலேயே, கங்கை நதி ப்ரவாகத்தில் வீசி எறிந்து अस्तुते अपवर्गः । உனக்கு விடுதலை ஏற்படட்டும் என்று சொல்லி அந்தப் பிள்ளையைக் கொன்று விட்டாள். அரசன் துணுக்குற்றான். இந்த விபரீதம் ஏன்? என்று கேட்கத் துடித்தவன் முன்செய்து கொண்ட நிபந்தனையை நினைத்து பேசாமல் இருந்து விட்டான். அப்படியே கங்கைக்குத் தொடர்ந்து பிள்ளைகள் பிறந்தனர். அவர்களுக்கும் அந்த கதியே. எட்டாவது பிள்ளையைக் கொல்லப் புறப்பட்ட கங்கையை வழி மறித்து "சொல் நீ யார்? இந்த பாதகம் இனி பொறுக்கமாட்டேன். ஏன் இந்த அநியாயம்?" என்று தடுத்தான்.

அரசனது செயலைக்கண்டு கங்கையும் சாந்தமுடன் பேசினாள்.—"பிள்ளை வேண்டிய உமக்கு இந்தப்பிள்ளையைத் தருகிறேன். ஆனால் எனக்கிட்ட நியமம் மறந்தால் இப்பொழுதே உம்மைப் பிரிந்து செல்வேன்" என்றாள்.

"ஏன் இப்படி விபரீதம்? நீ யார்? எதற்காக இந்த காரியம்?"

---

*இன்னல்வர்களையும் நமஸ்கரிக்கிறேன்—கிருஷ்ணர்.*

" அரசே! நான் உம் மனைவி என்பதை மாத்திரம் இவ்வளவு காலம் அறிந்திருந்தீர். இப்போது தெரிந்து கொள்ளும். நான் ஜன்ஹு மஹரிஷியின் புத்ரி. மூவுலகங்களையும் பாவனமாக்கும் தேவநதியான கங்கை. இந்தப் பிள்ளைகள் அஷ்டவஸுக்கள். வஸிஷ்டருடைய சாபத்தால் உமக்கும் எனக்கும் பிள்ளைகளாகப் பிறந்தனர். பிறந்ததும் அவர்கள் ஜன்மாவுக்கு விடுதலை தந்து விட்டதைத்தான் நீர் பார்த்துக்கொண்டிருந்தீர். இந்த எட்டாவது பிள்ளை உம்முடைய அவஸரத்தால் விடுதலை கிடைக்காமல் விலங்கில் அகப்பட்டுக்கொண்டு விட்டான். இவன் புவியில் உமது பிள்ளையாக மிகுந்த மேன்மையும் கீர்த்தியும் பெற்று விளங்குவான். ஆனால் இவனுக்கு ஸந்ததி இராது. இவனை என்னுடன் அழைத்துக்கொண்டு தேவ லோகம் சென்று இவனை ஸகல வித்யாபாரங்கதனுக்கிப் பிறகு உம்மிடம் அளிப்பேன். நீர் எப்பொழுது நினைத்தாலும் வருவேன். உமக்கு வந்தனம்" என்று சொல்லிக்கொண்டே கையில் பிள்ளையுடன் கங்கை மறைந்து போனாள். (தொடரும்)

## ஸ்ரீ காஞ்சி ஆச்சார்யாளின் அம்ருத மொழி.

நமது தர்மத்திற்கு—மதத்திற்கு—பெயர் கிடையாது. ஏன்? இது ஒன்றுதான் முதலில் எங்குமிருந்தது! ஒரு ஊரில் ஒரே ராமசாமி என்பவரிருந்தால் அவரை ராமசாமி என்றே தான் அழைப்பர். மகம்மதியர் கிருஸ்தவர் மதம் வந்தபின் நம் மதத்தை ஹிந்து மதம் என்றார்கள். மற்றும் சில ராமசாமி வந்தால் உயரமான ராமசாமி கருப்பு ராமசாமி என அழைக்கிறோம். அதே போல்தான் ஹிந்துமதம் என்பது.

நமக்கு வேதமே அறிவை ஊட்டி நல்வழி காட்டுகிறது. அது அநாதி. அதுகூறிய அன்பினால்தான் நம்மதம் வளர்ந்தது. நமது மதத்திலுள்ள சிறந்த தத்வங்களைக் கண்டு பலர் நம் மதத்தை தழுவுகின்றனர். நாம் ஸ்கூல் ஆஸ்பத்திரி மிஷின் பிரசாரக் கூட்டம் ஏற்படுத்தவில்லை. யாரையும் அழைக்கவில்லை.

நமக்கு வேதமே ஆணிவேர். அநுஷ்டானமே இலை பூ காய் கனி. ஜநந மரண மற்ற முக்தியே ரஸானுபவமாம். சயாம், கம்போடியா முதலிய தேசங்களில் நமது மதம் பரவி இருந்தது. ஆங்கு சிவலிங்கங்கள் இருக்கின்றன. பல சிலா சாஸநங்களுமிருக்கின்றன.

**ஸத் பிராம்மணனுக்கு தானம் தரவேண்டும்.**

# நவரஸம்.

—•) "அக்ஷயபரணி" (•—

## எப்படி நாடகம்?

ஸ்ரீ ராகவன் அயோத்தி திரும்பி முடிசூட்டிக்கொண்ட பிறகு, ராஜ்யபரிபாலனம் செய்த விருத்தாந்தங்களை யெல்லாம் கூறுவது உத்தர ராமாயணம். அந்தக் கதைகளைப் பின்னணியாகக்கொண்டு "உத்தர ராம சரிதம்" எனும் நாடகத்தை இயற்றினர் **பவபூதி** என்ற மகாகவி. இவரையும் காளிதாஸனையும் சம்மந்தப்படுத்தி ஒரு கர்ண பரம்பரையான கதை தென்னகத்தில் வழங்கி வருகிறது.

தன் நாடகத்தை எழுதிமுடித்த பவபூதி, காளிதாஸனின் விமர்சனத்தைப் பெற்றுக்கொண்டுதான் அதை வெளியிடவேண்டுமென்று ஆசைப்பட்டார். ஓலைச்சுவடிகளுடன் தனது சிஷ்யன் ஒருவனை, காளிதாஸன் வீட்டிற்கு அனுப்பி வைத்தார். சிஷ்யன் சென்ற வேளை அந்த மகாகவி, தன் அன்புக்குரியவளுடன் ஸரஸ ஸல்லாபம் செய்துகொண்டிருந்தார். தயங்கிய சிஷ்யனை உள்ளே வரவழைத்து, வந்த நோக்கத்தைத் தெரிந்துகொண்டு நாடகத்தை அப்போதே வாசித்துக் காட்டும்படி பணித்துவிட்டார் காளிதாஸன். அவனும் வாசித்துக்கொண்டே போனான்; நாயகி மடித்துக்கொடுக்கும் வெற்றிலையைச் சுவைத்துக்கொண்டே இருந்த காளிதாஸன், சிஷ்யன் படிப்பதில் கவனம் காட்டியதாகத் தெரியவில்லை. "முடிந்துவிட்டது" என்றான் சிஷ்யன். "போய்வரலாம்" என்று உத்தரவும் ஆயிற்று. அடங்காத ஆவலுடன் காத்திருந்த பவபூதிக்கு சிஷ்யன் வந்து சொன்ன வரலாறு மிகுந்த மனக்கசப்பை உண்டாக்கியது; "அற்புதம் என்று எண்ணி நான் படைத்த நாடகம் 'அற்பம்' என்றாகி விட்டதே; மகா மேதையான காளிதாஸனின் பாராட்டைப் பெறமுடியாத இந்த நாடகம் வெளியிடுவதற்கு அருகதையற்றது"— இவ்வாறு மனம் புழுங்கிய கவியை ஒருநாள் காளிதாஸன் சந்திக்கும்படி நேர்ந்துவிட்டது.

---

**யௌவநத்தைத் தன் மனைவியிடமே தரவேண்டும்.**

## ஸூன்னம் அதிகம் !

"என்ன நண்பரே! நாடகம் அரங்கேற்றம் ஆகி விட்டதா" என்று காளிதாஸன் கேட்டதற்கு, ஏக்கம் ஒலிக்கும் குரலில் பவபூதி, "எங்கே, தங்கள் கவனத்தைக்கூட பெறமுடியாதஎன் நாடகத்திற்கு அரங்கேற்றம் வேறு கேடா!" என்று பதிலுரைத்தார். பரபரப்படைந்த காளிதாஸன், "ஏன் இப்படிச் சொல்கிறீர்கள்! நாடகத்தை முழுதும் கேட்டுப் பெரிதும்ரஸித்தேனே! ஒரு இடத்தில் சிறு திருத்தம் கூடச் சொன்னேனே! சிஷ்யன் சொல்லவில்லையா?" என்ருர். அழைத்து வரப்பட்ட சிஷ்யன் 'திரு திரு' வென்று விழித்தான். "ஏனப்பா! ஓரிடத்தில் **ஸூன்னம் அதிகம்** என்றேனே, நினைவிருக்கிறதா" என்றுகேட்டார் காளிதாஸன். "ஆமாம்! ஆனால் சுண்ணும்பை வெற்றிலையில் அதிகம் தடவிவிட்டாயென்று அந்தப் பெண்ணுக்குத் தாங்கள் சொன்னதாக அல்லவா புரிந்துகொண்டேன்!" என்ருன் ஸாதுவான சிஷ்யன். "ஏ சிறு பிள்ளாய்! நான் சொன்னது சுண்ணும்பிற்கல்ல: நீ வாசித்துக்காட்டிய ஶ்லோகத்தின் கடைசியடியில் 'ம்' என்னும் எழுத்தில் இருக்கும் ஸூன்னம் அல்லது சுழி அதிகம்; அது இல்லாமலிருந்தால் அர்த்த புஷ்டி அதிகரிக்கும் என்றல்லவா திருத்தினேன்" என்று விளக்கம் கொடுத்ததோடு நிற்காமல் அறிவுச்சுடரான காளிதாஸன் அந்த ஶ்லோகத்தையே தன் நினைவிலிருந்து சொல்லியும் காட்டினர்.

**किमपि किमपि मन्दं मन्दमासक्तियोगा-**
**दविरलितकपोलं जल्पतोरक्रमेण ।**
**अशिथिल परिरम्भव्यापृतैकैक दोष्णो**
**रविदीतगतयामा रात्रिरेव व्यरंसीत् ॥**

*கிமபி கிமபி மந்த³ம் மந்த³மாஸக்தி யோக³ாத்*
*அவிரலித கபோலம் ஜல்பதோரக்ரமேண ।*
*அஶிதி²ல பரிரம்ப⁴ வ்யாப்ருதைகைக தோ³ஷ்ணோ*
*அவிதி³த க³தயாமா ராத்ரிரேவ வ்யரம்ஸீத் ॥*

---

**யஜமானன் காரியத்திற்காக உயிரைக் கொடு — கர்ணன்**

## இரவு தான் போயிற்று !

நாடகத்தில் இந்த ஶ்லோகம் அமைந்த கட்டத்தை கண்டால் தான் "ஸூன்னம்" படுத்தும் பாடு நமக்குப் புரியும்! ஸ்ரீ ராகவன் ஸீதையோடும் லக்ஷ்மணனோடும் சித்திர சாலையைப் பார்வையிடுகிருர்; அங்கே பகவான் வனவாஸத்தில் கண்ட காட்சிகளையெல்லாம் ஓவியமாகத் தீட்டி வைத்திருக்கிருர்கள். ஒவ்வொன்ருகப் பார்த்து வரும்போது கோதாவரி தீரத்தில் ஸ்வாமியும் பிராட்டியும் ஏகாந்தமாக வஸித்த காட்சிகள் தென்பட்டன. அதை சீதைக்குச் சுட்டிக் காட்டிய ராகவன் வாயிலாகத் தான் மேற் சொன்ன ச்லோகம் வெளிவருகிறது ! "ஏ. ப்ரியே ! ஓரிரவு இந்த ரமணீயமான சூழ்நிலையில்தானே நாம் இருவரும் ஏகாந்தமாக தங்கினேம்; ப்ரேம பாசத்தினுல் கட்டுண்டவர்போல் கிடந்தோம்; மெல்லிய குரலில் அர்த்தமில்லாமல் ஏதேதோ பேசிக்கொண்டு பொழுது போனதே தெரியாமல் இருந்தோம்; நினைவு இருக்கிறதா ! அன்றிரவு முழுதும் அப்படிக் கழிந்ததல்லவா !" கடைசியில் கண்ட கருத்தைக் குறிப்பதற்காக 'ர்ாத்ரி – இரவானது, ஏவம் – இந்தமாதிரி, வ்யரம்ஸீத் – கழிந்தது' என்று பவபூதி எழுதியிருந்தார்; இந்த இடத்தில் தான் காளிதாஸன், 'ராத்ரி: ஏவம்' என்று சொல்வதைக் காட்டிலும். ஏவ் என்பதில் 'வ' என்ற எழுத்துக்கு மேலே போடப்பட்ட சுழியை எடுத்து விடலாம் என்று திருத்தம் கூறினர். அப்போது "ராத்ரிரேவ" என்ருகும்; பொருள் எப்படி மாறுகிறது பாருங்கள். அதனுல் ! 'ராத்ரிரேவ = இரவு தான், வ்யரம் ஸீத் = கழிந்தது !' தம்பதிகளின் இன்ப சல்லாபங்கள் முடியவேயில்லை, இரவு மாத்திரம் தான் முடிந்ததாம்! ஸூன்னம் அதிகம் தான் என்று நாமும் இப்பொழுது ஒப்புக் கொள்ளத்தானே வேண்டும் !

## பெண்ணல்ல இவள் !

மேற் கூறிய ஸம்பவம் உண்மையா என்பது நம் விசாரம் அல்ல ! ஆனுல் அதில் ஒரு சுவாரஸ்யம் பாருங்கள்! இந்தக் கவிகளெல்லோரும் இரவு நேரத்தை சும்மா போக விடமாட்டார்கள்; தங்கள் சாதுர்யத்தைக் கூடச் சேர்த்துத்தான் வழியனுப்புவார்கள் ! வாருங்கள்

---

**உடலில் முக்கியமானது தலை. புலன்களில் கண் பிரதானம்**

மற்றொரு கவியின் காட்சியைக் காண்போம்! அதுவும் ராமாயணம்தான்! கைகேயியின் அந்தப்புறம். தசரதருக்கும் அவளுக்கும் பலத்த வாக்கு வாதம்.

"அடாத வரங்களைக் கேட்காதே! உலகம் உன்னைப் பழிக்கும்; உன் மகனே முடி சூட்டிக்கொள்ள விரும்ப மாட்டான்" என்று வாதாடினார் மன்னர்; கேட்கவில்லை.

"ஒழிந்துபோ! பரதன் ஆளட்டும்! ராகவனைக் காட்டிற்கு அனுப்பாதே! உலகத்தின் நிந்தனைக்கெல்லாம் நீ ஆளாவாய்" என்று கதறினார்; மறுத்து விட்டாள்.

கடைசியாக "என் பிராணன் போகும் நீ கேட்கும் வரத்தால்; உன்னை விதவையாக்கிக்கொள்ளாதே!" என்றார். அசையவில்லை கைகேயி.

"வரம் தருகிறீரா? அல்லது உம் முன்னிலையில் என் உயிரைப் போக்கிக்கொள்ளட்டுமா" என்று பயமுறுத்தினாள் பாதகி. தர்ம சங்கடத்திற்குட்பட்ட தசரதர் மன வெறுப்புடன் "ஈந்தேன்! ஈந்தேன்! இவ்வரம்!" என்று அலறி மூர்ச்சித்துக் கீழே விழுந்தார்; எடுத்த காரியம் முடிந்துவிட்டதென அமைதியோடு துயிலுற்றாள் கைகேயி!

இந்த வாக்குவாதங்களை யெல்லாம் அருகில் ஒரு பெண் நின்று கவனித்துவந்தாள் என்கிறார் கம்பர். அவள் நெஞ்சு பொறுக்கவில்லையாம்! "சீ! என்ன பெண் இந்த கைகேயி! உமக்கும் எனக்கும் ஒரே பிராணன்தான்; உடல்தான் இரண்டு என்றெல்லாம் இன்பவேளையிலே முன்பு யாரிடம் சொல்லிவந்தாளோ, அதே கணவன் தன் உயிருக்கு ஆபத்து என்று கதறியும் மனமிரங்காமல் பிடிவாதம் செய்தாளே! இவளும் ஒரு பெண்ணா! இவளால் பெண் குலத்திற்கெல்லாம் அழியாத பழி உண்டாகி விட்டதே! 'பெண்' என்று சொல்லிக்கொண்டு உலகத்தில் இனிமேல் நாம் எப்படி நடமாட முடியும்?" இவ்வாறு சிந்தித்த அந்த நல்ல பெண், நாணத்தால் சட்டென்று அவ்விடத்தை விட்டு விலகினாளாம்! அந்தப் பெண் யார் தெரியுமா? அவள் தான் இரவு என்ற மங்கை!

• 'சேண் உலாவிய நாள் எலாம் உயிர் ஒன்று போல்வன செய்து, பின்
ஏண் உலாவிய தோளினால் இடர் எய்த, ஒன்றும் இரங்கிலா
வாள் நிலா நகை மாதராள் செயல் கண்டு, மைந்தர் முன் நிற்கவும்
நாணினாள் என ஏகினாள்—நளிர் கங்குல் ஆகிய நங்கையே.'

---

ஆறு ரஸங்களில் உப்பும், நதிகளில் ஜலமும் பிரதானம்.

# ஸ்ரீ ராமன் அளித்த ஸுகம்.

ஸத்கதாம்ருத கலாநிதி, ஸ்ரீ T. S. பாலகிருஷ்ண சாஸ்த்ரிகள்.

[ஸ்ரீ ராமபிரான் அவதரித்ததற்கு உகந்த காரணம் ஒன்று முன்வந்த கீர்த்தனத்தில் ஸ்ரீ ஸ்வாமிகள் காட்டினர். "ஸ்ரீராமா! நீர் அவதரித்தது என் போன்றவர்களுக்காகவே. நீர் அவதரிக்காவிடில் இந்த தியாகராஜனுக்கு எது கதி? உம்முடைய ஸச்சரித்ரம் உலகில் கேட்கப்படாவிடில் என் மன மெய் மொழிகளுக்கு இன்பத் தேனூறும் இனிய கீதம் எது, கீதப் பொருள் எது? உன்னை விட்டுப் பிரியமுடிகிறதா? இது எனக்கு மட்டுமா - உலகில் எத்தனை எத்தனை பிறவிகளில் தோன்றியவர்களுக்கும் உன்னைக்கண்டு கொண்ட மாத்திரத்தில் கிட்டாத திவ்ய அம்ருத ரஸத்திலன்றோ ஆழ்த்திவிடுகிறீர்! உம்மைத் தனியே இருக்க யாரும் விடப்போவதில்லை. அன்றும் இல்லை. அது இன்றும் இல்லை. அரசன் என்றாலே, அவனுக்குத் தனிமை பறிபோய்விட்டது. நீர் ப்ரும்மம். அரசனாக வந்தீர். உம்முடைய தனிமையும் இனி எங்கே? உம்மைப் பார்க்கிறபொழுது சுற்றம் சூழ நின்று காட்சி அளிக்கிறீர். ஒரு பக்கம் என் தாயார் ஸீதையம்மை உம்மை நினைந்தவண்ணம் கடைக்கண் பார்வையால் கனிவு காட்டுகிறாள். அருகே தம்பிகளும், கீழே ஆஞ்சநேயனும், இவர்கள் உம்மைச் சிறிதும் தனியாக விட மாட்டார்களா? ஏன் விடுவார்கள்? காரணம் இல்லாமலா உம்மைச் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள்?"]

ராகம் — அஸாவேரி.] [ தாளம்—ஆதி.

பல்லவி.

லேகனு நின்னு சூட்டு கொன்னரு
ஏக ஹ்ருதயுலை நித்யானந்தமு — (லே)

அனுபல்லவி.

ஸ்ரீகர கருணா ஸாகர நிருபம
சின்மயாச்ரித சிந்தாமணி நீ ஏட — (லே)

---

ஒரே மண் பல பாத்திரங்களாக ஆகின்றது.

சரணம்.

1. ஸௌந்தர்யமுலலோ ஸுகமு ஸீதம்மகு
ஸௌமித்ரிகி கனுல ஜாடல ஸுகமு (லே)
2. ஸுந்தர முகமுன ஸுகமு பரதுனிகி
ஸுஞான ரூபமுன ஸுகமு ரிபுக்னுநிகி (லே)
3. சரணயுகமுநந்து ஸுகமு ஆஞ்ஜனேயுநிகி
வரகுண த்யாகராஜ வரதானந்தமு — (லே)

**பொருள் :—**

*பல்லவி: காரணம் இல்லாமலா உன்னை இவர்கள் சூழ்ந்துகொண்டிருக்கிறார்கள். ஒரே விதமான (ஏகரஸம்) நித்தியானந்தம் அல்லவா அவர்களுக்குக் கிடைத்துக் கொண்டிருக்கிறது.*

*சாதாரணமாக உலகில் ஒருவன் மற்றொருவனைச் சுற்றிக்கொண்டிருந்தால் அவனிடம் ஏதோ பொருளோ, பயனோ பெறத்தான் என்று நாம் நினைக்கிறோம். நீரோ,*

*அனுபல்லவி: ஸ்ரீகர ! லக்ஷ்மியுடன் கூடினவர் - செல்வச் சீமான் - (செல்வச் சீமானா? லக்ஷ்மியான அரசையும், லக்ஷ்மியான என் தாயையும் விட்டுப் பிரிந்தீரே) கருணாகர - கருணைக்கடல் அல்லவா நீர். (கருணைக்கடல் என்றால், பரதனைக் கதறவைத்தீர். லக்ஷ்மணனுக்குப் பரீக்ஷைகள் வைத்தீர். சத்ருக்கனனுடன் ஒரு வார்த்தைதான் பேசியிருப்பீரா? ஸுக்ரீவனைப் பலதரம் கலங்கவைத்தீர். வாலியை மறைந்து அடித்தீர். சூர்ப்பனகை என்ற மூட ராக்ஷஸியை சின்னாபின்னமாக்கினீர். ராக்ஷஸர்கள் அத்தனை பேரையும் மலைமலையாகக் கொன்று குவித்தீர். பிறகு என் தாயாரைக் கதறவிட்டுப் பொருத்திருந்தீர். இன்னும் உம்மை தயாநிதி என்கிறார்களோ?)*

*நிருபம சின்மய - காரணம் தெரிகிறது. நீர் பெரிய ஞானி ஐயா! ஒப்புயர்வில்லாத ஞானி ஐயா நீர். இருந்தாலும், உம்மை விடாது பிடித்துக்கொள்ள வைப்பது உம்மிடம் உள்ள வசிகரம். நீர் ஆச்ரித சிந்தாமணி - தன்னைவந்து அடைந்தவர்களுக்கு அவர்கள் அறியாமலே அபீஷ்டங்களை ஈடேற்றி வைக்கும் தன்மை உம்மிடம்*

---

**ஒரே ஸுவர்ணம் பல ஆபரணங்களாகின்றது.**

